உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# செம்பொருள்.

பன்னிற மணிகளும், வெண்ணிற முத்தமுந் துன்னிய முந்நீர்ச் சீர்கரந்தன்னைத் தானையாய்க்கொண்ட இம்மண்ணுலகத்தின் கண்ணே, காணப்படும் பலவகைப் பிறவிகளிலும் நல்லறிவுடையோர் மானுடர்களே யாவர். இஃது உத்தமமான வித்தகவறிஞர் விளம்பிய ஒன்றாகும்; அன்றி அனுடவத்தினுந் தெளிவாகும். இத்தகைய மனிதசரீரம் நமக்கு எய்தியது பூர்வ ஜன்மாந்தரங்களிலே உஞற்றிப்போந்ததபோபலத்தானன்றிப் பிறிதொன்றானு மன்றாம், ஆகலின், பலவித யோநிவாய்ப்பட்டுப் பருவரலுற்று எல்லையில் காலங்கழித்துக் கிடைத்த சொல்லருமறிவின் பெருமை சிவணிய இத்துர்லபமான தேகத்தை நிலைமையுடைத்தென்று நம்பியிருக்கலாமா? மின்னினும் மிளிர் தலின்மையை நோக்கி மேலாகிய கதிக்கேற்றன புரிதலே ஏற்றமடைத்து.

"மலர்மிசை யேகினான் மாண்டி சேர்ந்தார்;
நிலமிசை நீடுவாழ் வார்."

என்னும் அருங்குறட்பாவில் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் நம் சிந்தித வந்தனா நிலையையும் அதனால் அடையும் பிரயோசனத்தையும் தெரித்தருளினார். இதனாலே மறைமுதற் பொருளாய் மன்றினினடிக்குங் கறைமிடற் றொருவனைப் போற்றிடின் மாற்றமிலருள் திளைப்பு மன்னும் என்பது ஒருதலையாயிற்று. மலர் என்றது) ஹீர்த்புண்டரீகத்தினை, சேர்தல் இடைவிடாது சிந்தித்தல். நிற்க,

இவ்வுலகங்களிலேயும் நீக்கமின்மையால் சிவபரம்பொருள் சர்வ வியர்பகர் என்று அழைக்கப்படுவது போலவே நிர்மலமாய் அநாதியே பாசப்பற்றில்லாததாயும் உள்ளது *] இங்ஙனமே பலவருடங்களுக்கு

* யாழ்ப்பாணத்து நாவலர்கோட்டம் ஸ்ரீமாந். ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை யவர்களியற்றிய அபிதான கோசத்தில் சமயாசாரியர்கள் காலம் நுட்ப ஆராய்ச்சியாற் காட்டப்பட்டிருக்கிறது..

முன் செந்தமிழ்நாடு ஈடேறும்படி குடமுழா நந்தீசரது அவதாரர் என்று சொல்லப்பட்டு, இரத்திநமனைய சித்திரவசநங்களை நிரல்பட வைத்து வேதப்பொருளை விளக்கிய காரணத்தினால் தீக்ஷா குருவாகிய பரமசிவனால் "மாணிக்கவாசகன்" என்ற கராணத் திருநாமத்தைப் பெற்ற திருவாதவூரடிகளால்,

"உம்பர்கட் கரசே யொழிவற நிறைந்த
யோகமே யூற்றையேன் றனக்கு
வம்பெனப் பழுத்தென் குடிமுழுதாண்டு
வாழ்வற வாழ்வித்த மருந்தே
செம்பொருட் டுணிவே சீருடைக் கழலே
செல்வமே சிவபெருமானே
எம் பொருட் டுன்னைச் சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந் தருளுவ தினியே."

என்னத் திருவாய் மலர்ந்தருளப்பட்டது. அமிருதஸ்ய ஈசாந : மோக்ஷத்திற்கு ஈசாநர். என்ற வேதஉபபிருங்கணக் கூற்றும், 'நிர் மல:' என்னும் பதித்துவ விளக்கபதமும் இங்கே விசேடமாகக் கவனிக்கற்பாலன. மோக்ஷத்யாஹி என்பது "மருந்தே" என்பதனாலும் சுத்தநித்தபதி என்பது செம்பொருட்டுணிவே என்பதனாலும் உதகரித்தருளப் பட்டவாறு காண்க.

இவ்வண்ணமே ஆயிரத்தெண்ணூற் றெழுபது வருடங்களுக்கு மூன்னே பரதகண்டத்திலே செழுந்தமிழில் வடமொழி வேதார்த்தங்களைக் கிளர்ந்தெடுத்துத் துலங்கநாட்டி உத்தரவேதம் என்று என்றுங் குவலயத்தோர் யாவரும் கைக்கொண்டொழுகுமாறு, பிரம தேவாம்ச அவதாரத்தரான தெய்வப் புலமை திருவள்ளுவ நாயனாராலே, "சிவஸ்ஸர்வஸ்ய ஜந்தூநாம் அக்ஷாராணாம் அகாரவத்" என்ற சுலோக பாகக் கருத்தமைந்த, "அகர முதல வெழுத்தெல்லா மாதி, பகவன் முதற்றே யுலகு" எனத்தொடங்கி அருளிச் செய்யப்பட்ட திருக்குறளிலும்,

"பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னுஞ் செம்பொருள் காண்ப தறிவு" என்று அமிழ்தினும் இனிமை பொதுளிய இறைவனைக் குறித்துத் தியானஞ் செய்தலின் ஆவசியகமும், அதனால் வரும் பிரயோசனமும் இனிது விளக்கப் பெற்றிருக்கின்றன. பிறவிக்குக் காரணம் பேதைமை யென்பதூஉம், மோக்ஷத்திற்குக் காரணர் இறைவராகிய கடவுளென்பதூஉம் இதனாலே சூசிக்கப்பட்டன.

ஆணவம், கர்மம், மாயை முதலிய மலோபாதைகளை விடுத்துத் திருவருளே திருமேனியாகவுடைய சிவபரம்பொருளைச் செம்பொருளென்று யாண்டுங் கூறப்படுதலையுணர்ந்து, அறிவை நிறுத்தி ஆன்ம வீடேற்றத்தைத் தேடலே மரபாம். அவிச்சை முதலிய ஐவகைத் தோஷங்களும், அகம்பாவ முகிழ்ப்புடைய மாந்தர் மேற்கிடையாத மனிதசட்டை நழுவ மேவுங்கதியாதோ! அறியேம். ஜாதிகுலம் பிறப் புக்களின் உயர்வும் தாழ்வும் ஆன்மாக்களை நல்வழியினின்று நீங்கச் செய்யுமன்றி உய்வியாதே! ஆகலின், அறிவினைப் பெருக்கி அன்பினைத்துலக்கி யாவரும் துவேஷத்துன்பொருவி, இன்பகன்னிலையடை வோமாக. "சாத்திரம் பலபேசுஞ் சழக்கர்காள், கோத்திரமுங் குல முங் கொண்டென் செய்வீர், பாத்திரஞ் சிவமென்று பணிந்திரேன் மாத்திரைக்கு ளருளுமாற் பேறரே"

## முடிவுரை.

இதுவரையினும் சிற்றறிவுடையேன் எழுதிய சில வாக்கியங்களினாலே புலப்படக்கிடப்பன, செம்பொருளாய் விளங்குவோர் சிவ பெருமானே யென்பதும் சிவபரம்பொருளை ராகத் துவேஷ மின்றியும், தன்னுயிர் போன் மன்னுயிர் ஓம்புந் தலைமையினின்றும் வழிபடல் வேண்டும் என்பதும், இவ்வழிபாடு மானுடர்க்கே யேய்ந்த தென்பதும், மானுடதேகமும் நிலையில்லா ததென்பதும், நிலையுடைய காலத்தில் நேயசுகா நந்தராய் வாழவேண்டும் என்பதும் பிறவுமாம். இதனோடு சம்பந்தமான விஷயங்கள் பின்பு வெளிப்படுத்தலாகும். குரு வாழ்க. சுபம்.

வ. மு. இர்த்திநேசுவரையர்,
தமிழ்ப்பண்டிதர் காரைக்குடி.

சித்தாந்தம் - 1915 ௵ - ஆகஸ்டு ீ